ஊனும்போகமெமதென்றேயுன்னல்விசாரமிலாமையினால்
நீநானவைகளிவைகளெனநிலைபோல்விளங்கியிடுமிந்த
நானாவிதமாஞ்சகமுழுது நாமேயன்றிவேறில்லைத்
தானாய்நோக்கிற்றானாகுஞ்சகமாய் நோக்கிற்சகமாகும். ()

மாயையெனுமிவ்வுரைக்கருத்த மதிக்கின்யாதொன்றி லாததுவே, மாயையெனவிப்படியிருக்கமதிப்பரதனையிருவ கையாய், மாயைமெய்யென்றுரைத்திடுவர் மயக்கப்பட்டுத் தனைமறந்தோர், மாயைபொய்யென்றுரைத்திடுவர் மயக்க நீங்கித்தனையறிந்தோர். (௩௨)

நாமரூபந்தனைநோக்கி நாடன்மனமும்புறமுகமும்
நாமரூபந்தனைநீக்கி நாடலறிவுமுண்முகமும்
நாமரூபத்தெவ்வளவு நாட்டஞ்சொரூபந்தோன்றாது
நாமரூபநாட்டம்விடினமது சொரூபந்தோன்றியிடும். (௩௩)

அரையகுமாரன்புலையருட னணுகிமறந்துமொருவரால், அரையகுமாரனெனவறியி லஃதெப்போது *மறவாதின், த ரையிலா சானெழுந்தருளித் தனைப்பார்த்தது நீயெனவுரைக் கின், புரையிலதுவாமூவவத்தை பொருந்தும்பொழுதுமற வானால். (௩௪)

படியிற்பொருளின்மெய்யொன்று படிறென்றிந்தவிருவ கையும், முடிவின்மெய்பொய்யறிந்திடலா மொழியுமிந்தத் தகைமைபோல், கொடியவுலகைமெய்யெனவே கூறுமதை யுமறிந்திடலாம், முடிவிற்சகம்பொய்யேயாகு முத்தியொன் றேமெய்யாகும். (௩௫)

அகிலந்தோன்றுபொழுதுமறைந் ததிட்டானமதாய்வி ளங்கியிடும், அகிலநீங்கிற்றான்விளங்குமந்தச்சச்சிதானந்தம், அகிலந்தோன்றுபொழுதுமறைந்தது தோன்றுதல்போலது

* மறந்திலன்போல்-என்றும்பாடம்.



தோன்றில், அகிலந்தோன்றாததனின்மறைந் ததனாலகிலம சத்தாமே. (௩௬)

முத்தியாதோவெனவெண்ணிமுயங்கவேண்டாமிஃதறு தி, முத்தியுளதேற்பந்தமுண்டாமுத்தியொருகாலையுமில்லை, முத்திதானாஞ்சகம்வேறின் மோகமதிற்காண் பதைப்போக் கின், முத்தியாகுமிந்நிலையை முயன்றுவருந்தி நிலைகொள் வாய். (௩௭)

இல்லாமாயைதங்கணிலை யாருநிற்கவம்மம்ம, பொல் லாப்பிறப்பிற்பட்டதுமாய்ப் போக்கமிகவுந்தவிர்த்ததுமாய், நல்லாரிணக்கஞ்சேர்ந்ததுமாய்ஞான விசாரமுதித்ததுமாய், எல்லாமாம்வீ டடைந்ததுமா யார்க்குங்காட்டி மறைந்திடு மே. (௨௮)

எல்லாநீங்கிச்சற்குருவை யெங்குந்தேடியடைந்தருளி, நல்லாருணருஞானநூ னவின்றுவிசாரஞ் செய்வதுவும், பொ ல்லாமனத்தை யொடுக்கிநிட்டை பொருந்தி நோக்கல்லா நோக்கும், இல்லாமாயைதனைத்துணிவா யில்லையெனவேகா ணுதற்கே. (௩௯)

விளங்குஞ்சகங்களனைத்தினிலும்விளங்குநாமாதிகணீங்க
விளங்குமதைமாத்திரநோக்கில்விளங்கும்பிரமமக்கணமே
விளங்குநாமாதிகளுமதாய் விளங்கும்வேறாய்விளங்காது
விளங்குமிந்தநிலையெவர்க்கும் விளங்குமவிரோதமதாயே. ()

நாமரூபம்விளக்கல்பரம் நாடலுயிராமவைமாயை
நாமரூபந்தனைநோக்கி நாடச்செய்தலஞ்ஞானம்
நாமரூபத்திவ்வளவுநாட்டமெனவேசெய்தல்வினை
நரமரூபந்தனைநோக்கிநாடுமிடத்திலிவைநிகழும். (௪௧)

உருவநாமநோக்கிடத்திலுள்தாமிந்தவைவகையும்
உருவநாமநீக்கிடத்திலொன்றுமிவைகளிலவாகிச்
சொரூபமொன்றேநிகழ்தலினுற்சொன்னவிவைகளைவகையும்
சொரூபமன்றிவேறில்லைதோன்றும்விவகாரத்தசையில். (௪௨)

விவகாரத்திற் பகுப்புகளாய் விரியும்பரமார்த்தம் மதனில், சிவகாரமதாய்விளங்கியிடுஞ் சிவமேயனைத்து மாதலினுல், பவகாரியத்தை யுடையோர்க்குப் பகுப்பேயென்றுந் தோன்றியிடும், பவகாரியத்தை * யொழிந்தோர்க்குப் பகுப்பொன்றின்றிச்சிவந்தோன்றும். (௪௩)

பந்தத்தசையிற்பலவென்றும் பரமார்த்தத்தி லொன்றென்றும், இந்தச்சடங்குசொரூபத்தி லென்றுமில்லைநோக்கியிடின், எந்தக்காலு மொருபடித்தா யிலங்குஞ்சொரூபமிவைமாயா, தொந்தமதனிற்றேன்றியிடுஞ் சொரூபத்தாரோபிதமாகும். (௪௪)

மித்தியவாதிவேதாந்தி விளங்குஞ்சைவசித்தாந்தி
சத்தியவாதியிருவர்களுஞ் சாற்றுந்தங்கட்கடுக்காதை
மித்தியவாதிசகத்தினுக்கு விளம்புஞ்சிருட்டிமுடிவினின்றும்
சத்தியவாதிசிவமொழிந்து சற்றும்வேறில்லெனவுரைக்கும்.
சகமதென்பதில்லையெங்குந் தானேநின்றுவிளங்கியிடும்
சகமதெனவேதோன்றிடுதல் தமதுசங்கற்பம்மதனில்
அகமதனிலேகண்டுணராதவையிற்சிக்கிப்பந்தமுறும்
அகமதனிலேகண்டகற்றி லப்போபண்டைப்படிநிகழும். ()
பந்தமின்றிவீடின்றிப்பரமேயெங்கும்விளங்கிடவும்
பந்தம்வீடென்றெனவுரைத்தல் பார்க்கின்மாயாமோகமதில்
சிந்தைவிரிவேபந்தமதாஞ் சிந்தையொடுக்கமேவீடாம்
இந்தவகையாம்பந்தம்வீ டியம்புமபவாதமதாகும். (௪௭)

* ஒழித்தோர்க்கு-என்றும்பாடம்.



தோன்றிநிகழு முலகெல்லாஞ் சொரூபமே மற்றுருநாமம், தோன்றிநிகழ்தன்மாயையே *சொரூபம்விடவும்வேறன்று, தோன்றிநிகழுமுருநாமஞ் சொரூபம்விடவேறெனவுன்னித், தோன்றிநிகழ்தல்பந்தமதாஞ் சொரூபமெனவே யுனல்வீடாம். (௪௮)

உருவநாமமவைக்கிருப்பு முதிப்புஞ்சொரூபத்தினையன்றி
உருவநாமமவைதனக்கே யொருகாலையினுமிலதாகும்
உருவநாமமவைநோக்க லொருவிநமையேநோக்கியிடின்
உருவநாமநிகழ்ந்திடா தொருநம்வடிவாயேநிகழும். (௪௯)

பந்தமென்றும்வீடென்றும் பயிலுநினைவேபந்தமதாம்
பந்தமெங்காம்வீடெங்காம் பரத்தைவிடவேறிலாமையினுல்
தந்தஞ்சங்கற்பந்தனிலே தாமேமோகித்திடுமுயிர்கள்
தந்தமசங்கற்பந்தனிலே தாமேநீங்கியிடுமோகம். (௫௦)

உருவநாமந்தனைநோக்கி லொருதன்னிலையைநீங்கினதாம்
உருவநாமந்தனைநீக்கி லொருதன்னிலையேநின்றதுவாம்
உருவநாமமவையிரண்டு மொருதன்வடிவேயெனக்காணில்
உருவநாமந்தானேயா யொளிருமதுவேமுத்தியுமாம். (௫௧)

கொள்ளுநெறியேதேதுபந்தங் கூடும்வீடேதெனவேண்டா
உள்ளும்புறம்புமெனுமிவையி லுதவுமெஃதுதனக்கதனின்
றெள்ளுஞ்சங்கற்பங்களெல்லா மிரியநோக்கிநின்றதன்னை
உள்ளும்புறம்புமின்றியெங்கு மொளியாய்க்காணலாகியிடும்.

ஒளியேயெங்கும்விளங்கிடுமவ் வொளியில்விளங்கு முலகெல்லாம், ஒளியேயன்றிவேருமோ வொளியையறியா ருலகென்பர், ஒளியேயன்றியுலகுதனக் கொருகாரணமு மில்லைய

*. சொருபம்-என்றும் பாடம்.

தனால், ஒளியேயனைத்துந் திரைநுரைக ளுவரியலது வேறா
மோ. (௫௩)

மாயைவேறொன்றெனவுன்னி மதிக்கவேண்டாம்பேதமதி
மாயையாகுமற்றஃதை வருந்திமுயன்றுபேர்த்திடுக
மாயைநீங்குமிந்தமதிவந்தவழியேதெனவேண்டாம்
மாயைநெறியிலம்மதியை வதைக்கிலதுவந்ததுதோன்றும்.

விளங்கியிடுமிவ்வுலகெல்லா மித்தைவடிவேயென்பதுவும்
விளங்கியெங்குந்தற்சொரூபம் விமலவடிவேயென்பதுவும்
விளங்கிலருத்தமொன்றேயாம் வேறாய்க்காணுமஃதகற்றி
விளங்குமொளியாயேகாண்கில்விளங்குமருத்தமொன்றாயே.

தனதுசங்கற்பந்தனிலே சகங்களாகிவிளங்கியிடும்
தனதசங்கற்பந்தனிலே சகம்போயொடுங்குமதனாலே
தனதுவடிவேசகங்களெல்லாந் தன்னைவிடவேறிலைத்தங்கம்
தனதுவடிவைவிடப்பணிகடான்வேறாகிவிளங்கிடுமோ. (௫௬)

நிலைமைநீங்கிற்சகமுதித்து நிசமுமாகுமற்றவையின்
நிலைமைஞானவிசாரணையி னிசம்போயொடுங்குந்தோற்றரவு
நிலைமையாருந்தனைநோக்கி னீங்கிமறையுமிச்சகத்தின்
நிலைமையொருவேதுவினுதிக்குநீங்குமிருமையேதுவினில். ()

எல்லாநாமெப்படியாவோ மென்னவேண்டாமிலக்கண
ம்பார்த், தெல்லாநோக்கி யிடுமிடத்தி லிருப்புந்தோற்றரவு
மின்பும், எல்லாவிடத்துமுண்டாகு மியல்புமவையே பிரித்
திட்டால், எல்லாமெங்கே தோன்றிடுமோ விதனாலெல்லாநா
மாகும். (௫௮)

வெள்ளிவிகற்பமதிற்கிளிஞ்சில் விளங்கும்விகற்பந்தனை
நீக்கித், தள்ளின்வெள்ளி யென்பதுபோய்த் தானேவிளங்கு



மக்கிளிஞ்சில், வெள்ளியென்றபொழுதுமல விகற்பம்மென்
றபொழுதுமது, வெள்ளியாகிநீங்கினதில்விமலத்ததுபோன்
மாயையுமே. (௫௯)

ஒன்றேயென்னின்முத்தியில்லை யொருவன்வேறே யுண்
டென்னில், ஒன்றேயாகமாட்டா மற்றொன்றாமென்னிலொன்
றுகெடும், ஒன்றேயென்றவாதிகட்கு மோதுமிரண்டேயென்
றவர்க்கும், ஒன்றேயிரண்டுமா மொன்றேயுண்மைகற்பிதம்
மிரண்டே. (௬௦)

விகற்பமிலதுமுதற்றோன்றி விளங்கும்விமல மதினின்
றும், விகற்பமதனிற்சகந்தோன்றும் விண்ணிற்பீலிதோன்று
தல்போல், விகற்பமதிற்றோன்றுவதொழிந்து வேறில்லென
வேவிடுத்ததனை, விகற்பமின்றியேநோக்கின் விளங்கும்விமல
ந்தானாயே. (௬௧)

இந்தவிடையமவையில்வருமின்பும்பேரின்பத்திருந்தே,
வந்தலேசமிட்டமது வந்துகிடைத்த வக்கணமே, அந்தமுக
மாய்மதிதிரும்பியறிவானந்தங்கணம்புசிக்கும், அந்தமுகமே
யெக்காலுமாகினனைத்துமடைந்ததுவாம். (௬௨)

விருத்தியொன்றுமில்லாமல் விளங்குநிலையேநாமதனில்
விருத்திதோன்றின்முன்பினின்றிவிளங்குஞ்சகசீவபரங்கள்
விருத்திநீங்கின்முப்பொருளும் விளங்கிடாமற்றதனாலே
விருத்திதானேபந்தமதாம்விருத்தியொழிவேவீடாகும். (௬௩

நிருவிகற்பமதிடத்தி னின்றுவிகற்பமுதித்தளவில்
ஒருமுப்பொருளுமுதித்துவிடுமொருங்கேமூலவிகற்பமதை
ஒருவிநமதுநிலைதோன்றுமொருமுப்பொருளுமதுவாகும்
குருவினருளினிந்நிலையைக் கூடவேண்டுநெறிநின்றே. (௬௬)

ஏகபரத்திற்றோன்றுலகி லெங்கும்விடையமாதல்பரம்
ஏகவிடையமாதலுயிரிந்தவுயிர்க்கேமுத்தியினி,
ஏகவிடையமுதற்றள்ளி யெங்குமாகும்விடையமதிம்
ஏகத்தள்ளிமற்றுலகு மிறக்கிற்பண்டைப்படிநிகழும். (௬௫)

எங்கும்விடையமாம்பரத்துக் கிருளெக்காலுமிலையாகும்
தங்குமுயிர்க்கேமறதியுண்டாந் தன்னுற்றளவேகூடிடா
எங்கும்விடையமாம்பரமே யேகவிடையவுயிர்போலத் [ம்.
தங்கிக்குருவாயெழுந்தருளித்தள்ளுமுயிர்கண்மறதியெலா

மாயைபதனில்மும்முதலும்வகுப்பாய்விளங்கியிடுமந்த, மாயைநீங்கிலொருமுதலாய் வகுப்பொன்றின்றி விளங்கியிடும், ஆயபிரமமென்றுளதோ வன்றேயில்லாமாயையுமுண்,டாயபிரமமுள்ளளவு மந்தமாயைக்கழிவில்லை. (௬௭)

இந்தமாயைக்கழிவிலதேனிந்தவுயிர்கட் கொருகாலும், அந்தமுத்தியிலையென்னி லறையுமுயிர்கடமைமறந்த, பந்தநீங்கினக்கணமேபரமாய்விளங்குமதையன்றி, இந்தவில்லாமாயைக்கழிவிலதினிலைவீடெனக்கூடா. (௬௮)

தன்னைமறைத்தபந்தமதைத் தள்ளிநீங்கிற்றான்விளங்கும், தன்னைமறந்ததேபந்தந் தன்னையறிந்ததேமுத்தி, தன்னைவிடவோர் பொருளில்லைத் தானேபிரம மாயையும்பின், தன்னைவிடவேறாய்விளங்காதானேயாகிவிளங்கியிடும். (௬௯)

தன்னையறியாவியற்கையினிற் சத்தேபோலவிளங்கியிடும், தன்னையறிந்தவுடனசத்தாய்த் தானேவிளங்குமிவ்வுலகம், தன்னையறியுமளவுமிவை தன்னைவிடவேறிலையெனவே, தன்னைநோக்கியிடினவையுந் தானாய்விளங்குமுடிவதனில். ()



இல்லாமாயைதானிருந்தென் னிறந்தென்னவைபந்தமதாகா, இல்லாமாயைதனைமெய்யா யெண்ணுமதியேபந்தமதாம், இல்லாமாயைதனைப்பொய்யா யெண்ணுமதியேமுத்தியதாம், இல்லாமாயையில்லையென்றேயியல்பாய்த்தோன்றுந்தன்னிலையில். (௭௧)

நினைவேமூலமற்றதனி னின்றுவிரியும்முதலும், நினைவேநீங்கிலவைமூன்றுநினைவிலொடுங்குமதனாலே, நினைவேபந்தநினைவொழியினிலைமையானமுத்தியுமாம், நினைவேநீங்கியனுதினமுநின்றநிலையேநின்றிடுக. (௭௨)

நினைவுநீங்கிலுருநாம நீங்குமவ்வுலைத்தள்ளிடினும்
நினைவுநீங்குமற்றவையி னிலக்கேதிச்சயதின்று
நினைவுநீங்கிநின்றிடமேநிலைமையானமுத்தியென்றும்
நினைவுகொண்டநிலையைவிட்டுநீங்காதென்றுநின்றிடுக. ()



நினைவைநீக்கிநோக்கியிடினிமலசொரூபந்தோன்றியிடும்
நினைவைமேவிநோக்கியிடி னிலையிலுலகந்தோன்றியிடும்
நினைவிலுலகமறிந்ததுவு நீங்கிச்சொரூபமறிந்ததுவும்
நினைவினுக்கிற்றானில்லைநிகழுமாயாமோகமதில். (௭௪)

தனதுநிலையிற்றானிற்கச்சாற்றுமாயாமோகமதில், தனதுவடிவைமறந்துயிர்போற் றங்கிநீங்கிற்றானிகழும், தனதுவடிவுதோன்றளவுஞ்சத்தேபோலவிளங்கியிடும், தனதுவடிவுதோன்றளவிற்றானேயசத்தாய்விளங்கியிடும். (௭௫)

கானனீருங்கயிற்றரவுங்கட்டையதனிற்கள்வனுமே, ஆனவவைதம்மதிட்டான மாகுமவைகடோன்றளவும், ஆனதவைமெய்போற்றோன்றுமதுபோற்சகமுமதிட்டானம், ஆனசோரூபந்தோன்றளவுமசத்தல்லாதுபோல்விளங்கும். (௭௬)

அதிட்டானமதுதோன்றளவு மதுமெய்போலவிளங்கி
யிடும், அதிட்டானமதுதோன்றியபின் னசத்தேயாகிவிளங்
கியிடும், அதிட்டானமதுதோன்றளவு மசத்தென்றெணியே
நோக்ககற்றி, அதிட்டானமதாந்தனைநோக்கி லசத்தேயாகி
விளங்கியிடும்.
(எஎ)

தன்னைச்சீவனெனத்திரிவாய்த்தானின்றுணர்தலஞ்ஞா
னம், தன்னைப்பிரமமெனத்துணிவாய்த் தானின்றுணர்தலே
ஞானம், முன்னைத்தொடர்ச்சிவிடையமது மூலவரவும்வாத
னையும், பின்னையொருங்கேயொழிந்துவிடும்பேணல்விடுதல
வைவேண்டா.
(எஅ)

நிமலநெஞ்சையுடையோர்க்கு நிலத்திலாசானெழுந்த
ருளி, விமலதத்துவமசியெனவேவிளம்பிலவனுக்கக்கணமே,
மூமலநீங்கிச்சிவம்விளங்கு மோகநெஞ்சை யுடையோர்க்கு,
மூமலச்சார்வாம்வாதனையேமூடிமிகவுநிறைந்திடுமே. (எகூ)

எங்கேநிறுத்தினங்கிருக்குமியல்பையுடையநெஞ்சுடை
யோர்க், இங்கோர்மயக்கங்களுமில்லையிச்சையிறந்த நிலையா
கின், அங்கேயாசானெழுந்தருளியதுநீயெனவேயுரைத்தவு
டன், அங்கேசொரூபநாமெனவே யறுதியாகத் தோன்றி
யிடும்.
(அ௦)

ஒருவவேண்டுமனைத்துமென வுன்னவேண்டாவினைநீங்
கில், ஒருவுமனைத்தும்வினையுளதே லொன்றிமேவுமற்றவை
யை, ஒருவல்பற்றலவையைவிடுத் துள்ளபடியே முடியுமெ
னச், சொரூபநாமேயெனத்திடமாய்த்தோற்றுமதற்கேமுய
ன்றிடுக.
(அக)

சொரூபநாமேயெனத்திடமாய்த் துணிந்தபேர்களில்ல
றத்தை, மருவிநீங்காதிருந்திடினு மற்றோர்குறையுமவர்க்



கில்லை, சொரூபநாமே யெனத்திடமாய்த் துணியாதவர்களி
ல்லறத்தை, ஒருவிநீங்கினதுகொண்டே யுளதோமுத்திபவ
மறுமோ.
(அஉ)

மருவியில்லினிருந்தவர்க்கு மருவுஞ்சோக மோகமென்
றும், ஒருவித்துறவையடைந்தவர்கட் கொருவுமென்றுங் கூ
டாது, சொரூபநாமென் றறியார்க்குச் சோகமோக மற்றுவி
டா, சொரூபநாமென் றறிந்தவர்க்கே சோகமோக மற்று
விடும்.
(அங)

மித்தையதனைப் பற்றிடவும் விடவும்வேண்டா விவ்வுல
கை, மித்தையெனக் காண்குதல்போதும் விட்டுநீங்கு முட
ஞெருங்கே, எத்தைவிடுதலெதைப்பற்ற லென்னிற்சீவத்து
வமான, அத்தைவிடுதல்தனைநோக்கு மதைப்பற்றிடுதல்நெறி
யாகும்.
(அச)

இல்லமென்றுந் துறவென்று மெண்ணவேண்டா மற்ற
வையில், அல்லனீங்கி யொருநினைவா யசைவற்றிருந்து சொ
ரூபமதைச், செல்லவிடையூ றின்றியதைச் சேர்ந்தேநின்றுத
ன்னிலையைப், புல்லவிடையூ றுகுமதைப் போக்கிவிடுக வே
தானும்.
(அரு)

விளக்குஞ்சொரூபநோக்காது விளங்குமுலகை நோக்கி
யிடின், விளக்குஞ்சொரூபந்தோன்றாது விளங்குமுலகேதோ
ன்றியிடும், விளக்குஞ்சொரூபந்தனைநோக்கி விளங்குமுலகை
நோக்கமறில், விளக்குஞ்சொரூபமேதோன்றும் விளங்குமுல
குமதுவாய்ப்போம்.
(அசு)

தன்னைமறைத்தபந்தமதைத் தள்ளிநீக்கித் தனையறியி
ல், தன்னைவிடவோர் பொருளுமின்றித் தானேதானாய்விளங்
கியிடும், தன்னையறியுமவ்வளவுந்தன்னைவிடவேறிலையென்றே,

தன்னைநோக்கி யொருநினைவாய்ச் சாதித்திடவே மிகவேண்டும்.
(௮௭)

மூலவக்கரம்மதனின்மூன் றக்கரமுநின்றதுபோல்
நீலவுற்பலம்மதனி னிறமுன்மூன் றுநின்றதுபோல்
சீலமதனினோக்கியிடிற் சீவன்பரமச்சகமூன்று
கோலமவையுஞ்சொருபமதாய்க் கூடிநிகழுமொன்றாயே. ()

எல்லாமாகுந்தற்சொருப மிருக்குமளவுமாயையுமுண்
டில்லாமாயையுள்ளளவு மீசன்புரியும்பஞ்சதொழில்
இல்லாதொழிந்துபோவதில்லை யிதனாற்சிவபரமுண்டு [ம்.
சொல்லாநின்றவிவர்க்குக்கரி சொருபந்தானேபகுத்துநிற்கு

பகுத்துநின்றதற்சொருபம் பரசிவருக்குச்சாட்சியதாய்ப், பகுத்துநிற்குஞ் சாட்சியையே பார்த்துத்தத்துவமசியென்று,வகுத்துமாவாக்கியங்கூறுமற்றிச்சீவன்றனையல்ல,தொகுத்துக்கேட்ட திவனெனினுஞ் சொன்னதிவன் சாட்சியைப் பார்த்தே.
(௯0)

இந்தச்சீவன்கற்பிதமே யின்றிவேறோர்பொருளென்னில்
அந்தச்சொருபமிவனாகா னந்தச்சீவனொன்றாகும்
இந்தச்சீவனதுநாமென் றெண்ணிச்சோகம்பாவிக்க
அந்தச்சொருபமாய்விடுவ னவனைவிடவேறிவனிலதின். (௯௧)

இதனாற்பந்தமுத்தியுமுண் டிதனாற்பந்தமுத்தியுமின்
றிதனான்முத்திபெற்றவனுண் டிதனான்முத்திபெற்றவனின்
றிதனாற்பலவேயாகியிடு மிதனாலொன்றேயாகுமென
இதனாலவிரோதமதாகுமிதுவேநமதுசித்தாந்தம். (௯௨)

இந்தநெறியிலனுதினமு மேகாந்தத்திலொருநினைவாய்ப், பந்தமுத்திமார்க்கமதைப்பகுத்துவந்தவழிப்படியே,தொ



ந்தமகற்றிப்பழையபடி சொருபமதனி னின்றிடென, இந்தவகையேயருள்புரிந்தாளெனையாள்விருத்தவம்பிகையும். (௯௩)

கோர்த்துப்பத்துத்திசைகளினுங் குலவும்பதினாலுலகத்தும், பார்த்துநோக்குமிடமெல்லாம் பரமேநிற்கயானவமாய்க், கூர்த்துநோக்கிப்பாராது கொடுமைகளிலே நாட்கழித்தேன், ஈர்த்துவிருத்தவம்பிகைநின் றிந்தோவென்றாள்யான் கண்டேன்.
(௯௪)

கொக்குமிளாதேருதலினருட் குருவினருளிலியானோக்கத், இக்குலோகமென்றதெல்லாந் தெரியவேண்டியுளாத்ததுவாய்த், இக்குலோகமும்மிறந்து தேருமியானு மிறந்ததுவாய், ஒக்குமுவமையில்லாத வொளியாயெங்கு நிறைந்ததுவே.
(௯௫)

அந்தோவந்தோவாளாவிவ்வநுபூதியினையறியாது,வெந்தோர்மயக்கிலகப்பட்டு வீணினாளைக்கழித்துவிட்டேன், இந்தோபாவொன்றருட்சத்தி யெனக்குங்காட்ட யான்கண்ட, சந்தோடத்தைச்சொலப்படுமோதானேதானின்றறிவதுவே. ()

எந்தனுடையசரித்திரங்களெனக்கே நகைவந்திடுநினைக்கில், இந்தக்குறைகள்பாராம லென்னையும்வலிதிற்பிடித்திழுத்து, பந்தமுத்திவிவகாரம்பறித்தேயெறிந்துபழையபடி, அந்தவெனதுநிலையில்வைத்தவன்னைக்கெனையோகைம்மாறே. ()

எனதுவடிவையறியாமலிந்தவுயிராய்நின்றதுவும், மனதுமிகவும்வாடினதும் வழிகாணாமலேங்கினதும், தனதுகணிற்றோன்றிடு நெருப்பிற் றருவேவதுபோல்வெந்ததுவும், தனதுகடைக்கண் ணாலொழித்த தாய்க்குமெனையோ கைம்மாறே.
(௯௮)

என்னையறியாதிருவரையு மேங்கியுழன்று கிடப்பேற்குத், தன்னைநிகராம்விருத்தகிரி தங்குமுமையே தயவாகிப், பின்னையானுந் தானுமொன்றும் பிரமந்தனையே யறிவித்து, முன்னைமயக்கந்தனைக்கெடுத்த முதல்விக்கெனையோ கைம்மாறே. (௯௯)

எழிலார்விருத்தாசலவடிவா மெந்தைவாழ்கவெனையாளும், எழிலார்விருத்த வம்பிகையுமென்றும் வாழ்கவெனக்கருளும், எழிலார்பிரணவமும்வாழ்க வெந்தாயருணோக்கியிடும், எழிலாரடியார்களும் வாழ்கவெனைப்போ லெல்லோர்களும்வாழ்க. (௧௦௦)

## வேறு.

ஏருரும்விருத்தகிரிக்குமாரதே வெனுமுனிவ னிசைக்குநாவாய்க், காருரும்பழமலையிற் பெரியநாயகியிருந்தே கழறுமிந்தச், சீருரும்மத்துவிதவுண்மையநுபவ முணர்ந்தோர்திகழ்வாரொன்றும், தேருருஞ்சிவஞானை முத்திபெறலுண்மையிதிண்ணந்தானே. (௧௦௧)

அத்துவிதவுண்மை-முற்றுப்பெற்றது.

சர்வஞ்சின்மயம்.

---



கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# பிரமாநுபூதிவிளக்கமூலம்.

அநுபூதியானுரைக்கவாழ்த்துப்பிள்ளையெனக்
கனுகூலமாயிருந்தேயடைவாய்முடிதிடுமே. (௧)

பிரமாநுபூதியினைப்பெரியநாயகியெனக்குத்
திரமாகவருளியவாசெப்புவேனவளருளால். (௨)

அவளருளினாலேயநுபூதியின்விளக்க
மிவணுரைக்கேனந்நிலையையெய்தினோரோகளிக்க. (௩)

இவ்வநுபூதியையுரைக்கேனிவ்வநுபூதியைநன்றாய்ச்
செவ்விதியினறிந்தோர்கள்தேர்ந்துமிகக்களிக்க. (௪)

வடிவினைநோக்காதுளத்தின்வண்மையைத்தேருதலினெந்த
கொடியவுரைபாராதுகொள்ளுவர்மேலோரருத்தம். [ன்

அறிவறியாக்குழந்தைதனதனைமுன்னேகுழறுதலின்
பிறிவறியாதவர்முன்னேபேசுகேனநுபூதி. (௬)

குழந்தைகுழறும்மொழிக்குக்கொண்டாடுமனைபோல
இழந்தவுயர்ஞானிகளுமென்னுரை கேட்டுண்மகிழ்வர். (௭)

முத்தியைவேண்டிடினிப்போமுயலவேவேண்டுமெனப்
புத்தியெனக்கருள்செய்த பொதுவையெங்குங்கண்டனமே.

தனைத்தவிரவொன்றைத்தான்வேறாய்க்கண்டுவிடிற்
பினைச்சென்மநீங்காதுபிரமாநுபவமலவே. (௯)

தன்னைவிடவேறொன்றுந்தானில்லாத்தன்னிடத்திற்
றன்னினைவினாலேதான்சகம்போலத்தோன்றிடுமே. (௧௦)

எங்குஞ்சிதம்பரமாயெங்குநிறைந்திருக்கத்
தங்குநினைவாலஃதேசகம்போலத்தோன்றிடுமே. (கக)

தங்குநினைவதனைச்சாராதுநீக்கிடத்தில்
எங்குஞ்சிதம்பரமாயிருளறவேகண்டனமே. (கஉ)

மந்தவிருளிற்கயிறுமாசுணம்போற்றோன்றுதலி
னிந்தவுலகென்னிடத்திலிலகுமாரோபிதமாய். (கரு)

பழுதையினின்றோர்சத்திபாம்புபோற்றோன்றுதற்குப்
பழுதையிலுண்டதைப்போலப்பரத்தினுமுண்டோர்சத்தி. ( )

சூனியஞ்சித்துப்பிரமஞ்சுத்தசிவம்பரமென்று
தானிகழ்தல்வேறில்லைத்தனக்கேபரியாயம். (கரு)

சங்கற்பசத்தியினாற்சகம்போலத்தோன்றியிடுஞ்
சங்கற்பசத்தியதுந்தன்னைவிடவேறில்லை. (கசா)

தன்சத்தையேயுண்டாய்த்தானிருக்குமெப்போதுந்
தன்சத்தைதன்னிற்சகத்திற்குத்தானிருப்பே. (கஎ)

தன்சித்தேதோன்றித்தானிருக்குமெப்போதுந்
தன்சித்தினாலேசகமும்விளங்கிடுமே. (கஅ)

தன்னின்பேயின்பாய்த்தானிருக்குமெப்போதுந்
தன்னின்பினாலேசகமின்பாய்த்தோன்றிடுமே. (ககூ)

தானந்தமில்லாததானேயுண்டாய்விளங்கி
யானந்தமாகியென்றுமன்றேநிகழ்ந்திடுமே. (உ0)

தனதுசங்கற்பத்திற்றானுண்டாதலிற்சகமுந்
தனதங்கிசமூன்றுஞ்சகத்தினிகழ்ந்திடுமே. (உக)

தனதங்கிசமூன்றுந்தான்பிறித்துத்தானோக்கிற்
றனதங்கிசந்தோன்றுஞ்சகம்போயொளித்திடுமே. (உஉ)



சகமாகநோக்கிடத்திற்றனதங்கிசமூன்றுஞ்
சகமாகக்காரணமாய்த்தானதிட்டானமதாகும். (உரு)

சகமாகநோக்கிடத்திற்றானதிட்டானமதாகிச்
சகமாகவிளங்குதலாற்றனைத்தவிரவொன்றில்லை. (உச)

தானாய்ப்பார்த்திடுமிடத்திற்சகலமுந்தானாய்த்தோன்றுந்
தானாய்ப்பாராவிடத்திற்சகலமும்வேறாய்த்தோன்றும். ( )

தனைத்தவிரவேறொன்றுதான்காணிலவனுக்குப்
பினைப்பயமும்போகாதுபெரும்பவமுநீங்காது. (உசா)

தன்னினைவினாலேசகமாய்விரிந்ததென்ன
தன்னினைவைநீங்கித்தானாயிருந்தனமே. (உஎ)

உண்டாயொடுங்குவதுமுண்டானதன்னிடத்தே
யுண்டாகுமென்றேயொடுங்கியிருந்தனமே. (உஅ)

ஐந்துதொழிலுமைந்தொழிலைத்தானடத்து
மைந்துகருத்தாவுமாகியிருந்தனமே. (உகூ)

இவ்வடிவுநாமல்லவென்றுநியதிபண்ணி
யவ்வடிவைநோக்கிடத்திலனைத்துநாமேயானோம். (௩0)

இவ்வடிவுபந்தமெனவெண்ணியேநீக்கிடத்தி
னெவ்வடிவுந்தானாயிருந்தேனதிசயமே. (௩க)

இப்பந்தம்போகவெண்ணியேநீக்கிடத்தி
லெப்பந்தமுமாகியிருந்தேனதிசயமே. (௩உ)

இவ்வடிவுந்தானாகியெங்குந்திரிவேனுக்
கெவ்வடிவுந்தானாயிருக்கிலினியென்செய்வேன். (௩௩)

ஒருவடிவுகாக்கவுழன்றுதிரிவேற்கு
வருவடிவெல்லாமாகின்வாட்டமறக்காப்பதெங்கே. (௩ச)

சீவனாய்நீக்கிற்றிகைத்தனனோருருவுக்குத்
தேவனாய்ப்பேர்நீக்கிற்றிகைபெனென்றினைக்குறித்தும். ()

உலகமுயிர்பரமென்றுரைத்திடுமூவகைப்பொருளு
மிலகவேயானாகவென்னநுபூதியிற்கண்டேன். (௩௬)

எனைத்தவிரவேறொன்றுமில்லையெனக்கண்டளவிற்
பினைத்தவிப்புநீங்கிப்பிரமமாயேயிருந்தேன். (௩௭)

தன்னுடைய * சன்னிதானந்தனினின்று
பின்னுலகமெல்லாம்பிறிவின்விளங்கிடுமே. (௩௮)

சங்கற்பசத்திதானனந்தமாய்விரியு
மங்கப்படிநிகழுமண்டபிண்டமானதெல்லாம். (௩௯)

சங்கற்பமென்றுஞ்சகமென்றும்வேறில்லை
சங்கற்பமேசகமுஞ்சகமேசங்கற்பமதும். (௪௦)

ஓரிடத்திற்கூவுமுழையுமப்படியெதிரிட்
டோரிடத்திற்கூவுதலினுலகுநினைவேயாம். (௪௧)

நினைவென்றசங்கற்பநிசவடிவைநோக்கிடத்திற்
றனையன்றிவேறில்லைத்தங்கத்திற்பணதியைப்போல். (௪௨)

யானாகேனென்றகற்றும்யாதும் † பிரிவின்றி
யானாகிநிற்குகேனென்னவதிசயமே. (௪௩)

ஆங்காரஞ்சித்தமந்தமனமதியிறந்து
நீங்காதவென்னிடத்தினிலையாயிருந்தனமே. (௪௪)

சங்கற்பமுண்டாகிற்சாற்றுமகக்கரண
மங்கப்போதுண்டாகியகங்காரமாதிகளாம். (௪௫)

ஐயந்துணிவுவபிமானஞ்சிந்தனைகள்
செய்யுமகக்கரணச்சித்தமுதனான்கும். (௪௬)

* சந்நிதானம்-என்றும்பாடம். † பிறிவின்றி-என்றும்பாடம்.



ஓசைபரிசமுருவஞ்சுவைகந்த
மாசையினிற்றானறியவறிவிந்தியந்தோன்றும். (௪௭)

அறிவிந்தியமதனிலறிந்துசெயக்கருமப்
பொறியைந்துந்தோன்றும்பொருந்துமிவைபதினாலாம். ()

சங்கற்பம்வேறாகிற்றான்பதினாலும்வேறாஞ்
சங்கற்பந்தானாகிற்றானாய்விளங்கிடுமே. (௪௯)

எவ்வெவ்வடிவுதொறுமிருந்துநினைவெப்படியோ
வவ்வவ்வடைவேயடைந்தேயிருந்தனமே. (௫௦)

அவ்வவ்வடிவுமவ்வவர்க்கேதோன்றியிடு
மெவ்வடிவுமியாமென்னவிருந்தநுபூதியிலறிந்தேன். (௫௧)

எல்லாவடிவுமியாமெனவேகாண்பதன்றி
யெல்லாரநுபவமுமியாமறியவேண்டுவதில். (௫௨)

ஒரொருவற்கண்டிடலுமுயிராச்சித்தியிற்காண்டற்
பேருருவைக்கண்டவர்க்குப்பிறிதொன்றுங்காணாதே. (௫௩)

எல்லோரநுபவமுமிதுவெனவேகண்டிடலு
நில்லாநினைவதனினிசமாகக்கூடியன்றோ. (௫௪)

நினைவதனைநீக்கிநிசசொரூபங்கண்டவர்க்கு
நினைவதனைக்கூடநினையாதொருக்காலும். (௫௫)

எந்தப்பொருள்களினின்றெய்தியிடுமின்பனைத்து
மந்தப்பிரமத்தினானந்தலேசமதே. (௫௬)

அந்தப்பிரமவானந்தந்தானடைந்தோர்
எந்தெப்பொருள்களினுமின்புளதென்றெண்ணுவரோ. (௫௭)

சகல * கர்மங்களையுந்தானேககாலத்தி
லகமகிழ்வேயடைந்தவதிசயமும்பெற்றனமே. (௫௮)

* கருமம் - என்றும் பாடம்.

என்னையறியாதிதவரையு மேங்கியுழன்று கிடப்பே
குத், தன்னைநிகராம்விருத்தகிரி தங்குமுமையே தயவாகிப்
பின்னையானுந் தானுமொன்றும் பிரமந்தனையே யறிவித்து,
முன்னைமயக்கந்தனைக்கெடுத்த முதல்விக்கெனையோ கைம்
மாறே. (கக)

எழிலார்விருத்தாசலவடிவா மெந்தைவாழ்கவெனையா
ளும், எழிலார்விருத்த வம்பிகையுமென்றும் வாழ்கவெனக்க
ருளும், எழிலார்பிரணவமும்வாழ்க வெர்தாயருளைநோக்கி
யிடும், எழிலாரடியார்களும் வாழ்கவெனப்போ லெல்லோர்
களும்வாழ்க. (க00)

வேறு.

ஏருரும்விருத்தகிரிக்குமாரதே வெனுமுனிவ னிசைக்கு
நாவாய்க், காருரும்பழமலையிற் பெரியநாயகியிருந்தே கழறு
மிந்தச், சீருரும்மத்துவிதவுண்மையநுபவ முணர்ந்தோர்திக
ழ்வாரொன்றும், தேருருஞ்சிவஞானமுத்திபெறலுண்மையி
திதிண்ணந்தானே. (க0க)

அத்துவிதவுண்மை - முற்றுப்பெற்றது.

சர்வஞ்சின்மயம்.

---

—எ)

(உஅ)

யுண்ட...

ஐந்தொ...
மைந்திகருத்தாவு... (உகூ)

இவ்வடிவுநாமல்லவென்றுநியதிபண்
யவ்வடிவைநோக்கிடத்திலனைத்துந... ...றும். (௩0)

இவ்வடிவுபந்தமெனவெண்ணியேநீக்கிடத்தி
னெவ்வடிவுந்தானுயிருந்தேனதிசயமே. (௩க)

இப்பந்தம்போகவெண்ணியேநீக்கிடத்தி
லெப்பந்தமுமாகியிருந்தேனதிசயமே. (௩உ)

இவ்வடிவுந்தானுகியெங்குந்திரிவேனுக்
கெவ்வடிவுந்தானுயிருக்கினியென்செய்வேன். (௩௩)

ஒருவடிவுகாக்கவுழன்றுதிரிவேற்கு
வருவடிவெல்லாமாகின்வாட்டமறக்காப்பதெங்கே. (௩ச)

எங்குஞ்சிதம்பரமாயெங்குநிறைந்திருக்கத்
தங்குநினைவாலஃதேசகம்போலத்தோன்றிடுமே. (௧௧)

தங்குநினைவதனைச்சாராதுநீக்கிடத்தில்
எங்குஞ்சிதம்பரமாயிருளறவேகண்டனமே. (௧௨)

மந்தவிருளிற்கயிறுமாசுணம்போற்றோன்றுதலி
னிந்தவுலகென்னிடத்திலிலகுமாரோபிதமாய். (௧௩)

பழுதையினின்றோர்சத்திபாம்புபோற்றோன்றுதற்குப்
பழுதையிலுண்டதைப்போலப்பரத்தினுமுண்டோர்சத்தி. ()

சூனியஞ்சித்துப்பிரமஞ்சுத்தசிவம்பரமென்று
தானிகழ்தல்வேறில்லைத்தனக்கேபரியாயம். (௧௫)

சங்கற்பசத்தியினாற்சகம்போலத்தோன்றியிடுஞ்
சங்கற்பசத்தியதுந்தன்னைவிடவேறில்லை. (௧௬)

தன்சத்தையேயுண்டாய்த்தானிருக்குமெப்போதுந்
தன்சத்தைதன்னிற்சகத்திற்குத்தானிருப்பே. (௧௭)

தன்சித்தேதோன்றித்தானிருக்குமெப்போதுந்
தன்சித்தினாலேசகமும்விளங்கிடுமே. (௧௮)

தன்னின்பேயின்பாய்த்தானிருக்குமெப்போதுந்
தன்னின்பினாலேசகமின்பாய்த்தோன்றிடுமே. (௧௯)

தானந்தமில்லாததானேயுண்டாய்விளங்கி
யானந்தமாகியென்றுமன்றேநிகழ்ந்திடுமே. (௨0)

தனதுசங்கற்பத்திற்றானுண்டாதலிற்சகமுந்
தனதங்கிசமுன்றுஞ்சகத்திநிகழ்ந்திடுமே. (௨௧)

தனதங்கிசமூன்றுந்தான்பிறித்துத்தானேக்கிற்
றனதங்கிசந்தோன்றுஞ்சகம்போயொளித்திடுமே. (௨௨)



சகமாகநோக்கிடத்திற்றனதங்கிசமூன்றுஞ்
சகமாகக்காரணமாய்த்தானதிட்டானமதாகும். (௨௩)

சகமாகநோக்கிடத்திற்றானதிட்டானமதாகிச்
சகமாகவிளங்குதலாற்றனைத்தவிரவொன்றில்லை. (௨௪)

தானாய்ப்பார்த்திடுமிடத்திற்சகலமுந்தானாய்த்தோன்றுந்
தானாய்ப்பாராவிடத்திற்சகலமும்வேறாய்த்தோன்றும். ()

தனைத்தவிரவேறென்றுதான்காணிலவனுக்குப்
பிணைப்பயமும்போகாதுபெரும்பவமுநீங்காது. (௨௬)

தன்னினைவினாலேசகமாய்விரிந்ததென்ன
தன்னினைவைநீங்கித்தானாயிருந்தனமே. (௨௭)

உண்டாயொடுங்குவதுமுண்டானதன்னிடத்தே
யுண்டாகுமென்றேயொடுங்கியிருந்தனமே. (௨௮)

ஐந்துதொழிலுமைந்தொழிலைத்தானடத்து
மைந்துகருத்தாவுமாகியிருந்தனமே. (௨௯)

இவ்வடிவுநாமல்லவென்றறியதிபண்ணி
யவ்வடிவைநோக்கிடத்திலனைத்துநாமேயானோம். (௩0)

இவ்வடிவுபந்தமெனவெண்ணியேநீக்கிடத்தி
னெவ்வடிவுந்தானாயிருந்தேனதிசயமே. (௩௧)

இப்பந்தம்போகவெண்ணியேநீக்கிடத்தி
லெப்பந்தமுமாகியிருந்தேனதிசயமே. (௩௨)

இவ்வடிவுந்தானாகியெங்குந்திரிவேனுக்
கெவ்வடிவுந்தானாயிருக்கிலினியென்செய்வேன். (௩௩)

ஒருவடிவுகாக்கவுழன்றுதிரிவேற்கு
வருவடிவெல்லாமாகின்வாட்டமறக்காப்பதெங்கே. (௩௪)

சீவனாய்நீக்கிற்றிகைத்தனனோருருவுக்குத்
தேவனாய்ப்பேர்நீக்கிற்றிகையேயெனன்றினைக்குறித்தும். ()
உலகமுயிர்பரமென்றுரைத்திடுமூவகைப்பொருளு
மிலகவேயானாகவென்னநுபூதியிற்கண்டேன். (௩௬)
எனைத்தவிரவேறொன்றுமில்லையெனக்கண்டளவிற்
பிணைத்தவிப்புநீங்கிப்பிரமமாயேயிருந்தேன். (௩௭)
தன்னுடைய * சன்னிதானந்தனினின்று
பின்னுலகமெல்லாம்பிறிவின்விளங்கிடுமே. (௩௮)
சங்கற்பசத்திதானனந்தமாய்விரியு
மங்கப்படிநிகழுமண்டபிண்டமானதெல்லாம். (௩௯)
சங்கற்பமென்றுஞ்சகமென்றும்வேறில்லை
சங்கற்பமேசகமுஞ்சகமேசங்கற்பமதும். (௪௦)
ஓரிடத்திற்கூவுமுறையுமப்படியெதிரிட்
டோரிடத்திற்கூவுதலினுலகுநினைவேயாம். (௪௧)
நினைவென்றசங்கற்பநிசவடிவைநோக்கிடத்திற்
றனையன்றிவேறில்லைத்தங்கத்திற்பணதியைப்போல். (௪௨)
யானாகேனென்றகற்றும்யாதும் † பிரிவின்றி
யானாகிநிற்குகேனென்னவதிசயமே. (௪௩)
ஆங்காரஞ்சித்தமந்தமனமதியிறந்து
நீங்காதவென்னிடத்தினிலையாயிருந்தனமே. (௪௪)
சங்கற்பமுண்டாகிற்சாற்றுமகக்கரண
மங்கப்போதுண்டாகியகங்காரமாதிகளாம். (௪௫)
ஐயந்துணிவுவபிமானஞ்சிந்தனைகள்
செய்யுமகக்கரணச்சித்தமுதனான்கும். (௪௬)

* சந்நிதானம்-என்றும்பாடம். † பிறிவின்றி-என்றும்பாடம்.



ஓசைபரிசமுருவஞ்சுவைகந்த
மாசையினிற்றானறியவறிவிந்தியந்தோன்றும். (௪௭)
அறிவிந்தியமதனிலறிந்துசெயக்கருமப்
பொறியைந்துந்தோன்றும்பொருந்துமிவைபதினாலாம். ()
சங்கற்பம்வேறாகிற்றான்பதினாலும்வேறாஞ்
சங்கற்பந்தானாகிற்றானாய்விளங்கிடுமே. (௪௯)
எவ்வெவ்வடிவுதொறுமிருந்துநினைவெப்படியோ
வவ்வவ்வடைவேயடைந்தேயிருந்தனமே. (௫௦)
அவ்வவ்வடிவுமவ்வவர்க்கேதோன்றியிடு
மெவ்வடிவுமியாமென்னவிருந்தநுபூதியிலறிந்தேன். (௫௧)
எல்லாவடிவுமியாமெனவேகாண்பதன்றி
யெல்லாரநுபவமுமியாமறியவேண்டுவதில். (௫௨)
ஓரொருவற்கண்டிடலுமுயிராச்சித்தியிற்காண்டற்
பேருருவைக்கண்டவர்க்குப்பிறிதொன்றுங்காணாதே. (௫௩)
எல்லோரநுபவமுமிதுவெனவேகண்டிடலு
நில்லாநினைவதனிசமாகக்கூடியன்றோ. (௫௪)
நினைவதனைநீக்கிநிசசொரூபங்கண்டவர்க்கு
நினைவதனைக்கூடநினையாதொருக்காலும். (௫௫)
எந்தப்பொருள்களினின்றெய்தியிடுமின்பனைத்து
மந்தப்பிரமத்தினானந்தலேசமதே. (௫௬)
அந்தப்பிரமவானந்தந்தானடைந்தோர்
எந்தெப்பொருள்களினுமின்புளதென்றெண்ணுவரோ. (௫௭)
சகல * கர்மங்களையுந்தானேககாலத்தி
லகமகிழ்வேயடைந்தவதிசயமும்பெற்றனமே. (௫௮)

* கருமம் - என்றும் பாடம்.

ஒருகுடைக்கீழரசாள்வோனொருக்கரசாகக்
கருதுவனோவதினொன்றுங்கலங்காதிருந்தனமே. (௫௯)

காண்பதெல்லாந்தன்னுருவாய்க்காண்பதன்றிவேறாகக்
காண்பதுவுமுண்டோகயிற்றைவிடவரவுண்டோ. (௬௦)

இத்தகைநிச்சயமுணர்ந்தேயிதிற்கலக்கமில்லாமற்
புத்திசமாதானத்தைப்பொருந்தல்சமாதியதாகும். (௬௧)

பேதவாதியைக்குறித்துப்பேசுமறைசகசிருட்டி
பேதநீங்கின்றதென்றும்பிரமமேயுளதாகும். (௬௨)

தோற்றமொடுக்கமில்லைத்தோற்றமொடுக்கத்திலுள்ள
மாற்றரியபெத்தமுத்திமருளென்றறிந்தனமே. (௬௩)

முத்தியுளதென்றெண்ணின்மொய்ப்பந்தமுண்டாகும்
புத்தியினிலஃதொருவிப்போதமாயிருந்தனமே. (௬௪)

வாரிபலவடிவானவாறுபோற்சங்கற்ப
நேரினாற்றான்றானேநிலையில்சகமாய்நிகழும். (௬௫)

சகமென்றுந்தானென்றுஞ்சாற்றிடுதன்மாத்திரமே
யகமதிற்றேர்ந்திடுமிடத்திலகண்டமாயிருந்ததுவே. (௬௬)

சத்தேயுளதென்றுஞ்சகமதனிற்றானின்று
சத்தேபோற்றோன்றியிடுந்தான்சித்தேயெக்காலும். (௬௭)

தோற்றிடுதறன்சத்தேதோற்றிடுந்தன்சத்தையினிற்
றோற்றிடுமிச்சகமனைத்துஞ்சொற்றிடுங்கற்பிதவடிவே. (௬௮)

சத்தைக்கேதோற்றரவுதானுண்டசத்தினுக்குச்
சத்தைப்போற்றோற்றமில்லைச்சத்தையினிற்றானிகழும். (௬௯)

சத்தையிடமாய்நின்றேதான்வேறுபோற்றோன்றிச்
சத்தைபோலேநிகழுஞ்சகமசத்தேயல்லவோ. (௭௦)



அசத்தொருகாலையுந்தோன்றாதந்தவுளசத்தையே
யசத்தையுளதின்விளக்குமதிட்டானமாய்நின்றே. (௭௧)

தோற்றிடுதல்சத்தையேதோற்றிடுமிச்சத்தையினிற்
றோற்றிடுமிச்சகமனைத்துஞ்சொல்லாய்முடிந்ததுவே. (௭௨)

சத்தைக்கேதோற்றரவுஞ்சார்ந்திடுமானந்தமதுஞ்
சத்தையில்லாதிந்தச்சகத்தினுக்குத்தானுண்டோ. (௭௩)

சித்துக்கேயுள்யிருப்புஞ்சேர்ந்திடுமானந்தமதுஞ்
சித்தில்லாதிந்தச் * செகத்தினுக்குத்தானுண்டோ. (௭௪)

ஆனந்தமானதற்கேயானவிருப்புமுதிப்பு
மானந்தமில்லாதவகிலத்துக்கும்முளதோ. (௭௫)

சச்சிதானந்தத்திற்சகங்கற்பிதமாகிச்
சச்சிதானந்தத்தைத்தான்விடாதேநிகழும். (௭௬)

தோன்றுவதுசித்தேதொல்லுலகுநானாவாய்த்
தோன்றுவதுகற்பிதமேசொரூபமன்றிவேறுண்டோ. (௭௭)

சொரூபலக்கணஞ்சகத்திற்றோன்றிவிளங்குதலாற்
சொரூபமேயென்றுதுணிந்தேயமைந்தனமே. (௭௮)

அறியாமையாலேயகிலம்போற்றோன்றியிடு
மறியாமைநீங்கிடத்திலறிவாயேதோன்றியிடும். (௭௯)

என்றுமொருபடியாயிருந்தபடியிருக்க
நின்றபடிபாராமுன்னிலைகலங்கிநின்றனமே. (௮௦)

† நிலைபிறிந்தபோதுநிலையினில்வந்திடுபோது
நிலைபிறியாதேநிகழுநிஜசொரூபமல்லவோ. (௮௧)

நிலைபிறிந்ததென்றுநிலையினினின்றேநோக்கி
னிலைபிறிந்ததேயிலையாய்நிஜசொரூபந்தோன்றினதே. (௮௨)

* சகம்-என்றும் பாடம். † நிலைபிரிந்த-என்றும் பாடம்.

பந்தமுத்தியென்னப்பகர்ந்திடுமிரண்டென்று
மந்தபரிபூரணத்திலன்றேயில்லையலவோ. (௮௩)

தன்னையேகண்டுதானிருக்கவெல்லோருந்
தன்னையாரொன்றேதவிப்பதுவுமென்னையோ. (௮௪)

கண்டிடுதலெல்லாங்கனசொரூபமேயன்றோ
கண்டிடுதல்வேறென்றுங்கலங்குவதுமென்னையோ. (௮௫)

தோன்றிவிளங்குவதுதொல்லுலகுக்குமுண்டோ
தோன்றிவிளங்குவதுசொரூபத்துக்கேயன்றோ. (௮௬)

ஆதலினாற்காண்பதெல்லாமறிவுருவேயெனக்கண்டு
போதவிழிதிறந்துபொருளாயிருந்தனமே. (௮௭)

முன்வினையாஞ்சஞ்சிதத்தின்முடிச்சையவிழ்த்தனமே
பின்வினையாகாமியத்தைப்பிடித்துப்பிசைந்தனமே. (௮௮)

வீடுபந்தமென்றிடுதன்மித்தையேயாதலினால்
வீடுவினையிரண்டுமெங்கேயுளதாகும். (௮௯)

ஒருகாலுநிலைகலங்காதுண்டாய்ப்பெற்றதிலமைந்து
வருகாலஞ்செல்காலமதியாதிருந்தனமே. (௯0)

* தெரிசனத்தின்முத்தியெனச்செப்புஞ்சிதம்பரத்தைக்
கரிசனமாய்க்கண்டுகருக்கழியநின்றனமே. (௯௧)

பார்த்தவிடமெங்கும்பரிபூரணமாகிக்
கோத்திருந்தபாழ்தனிலேகுடியாயிருந்தனமே. (௯௨)

செகமதையுந்தான்விழுங்கிச்சீவனையுமுள்வாங்கி
யகமதுவும்புறமுமிலாவகண்டமாய்நின்றனமே. (௯௩)

அதுவிதுவென்றிடவில்லாவகண்டபரிபூரணமாம்
பொதுவதனிற்குடியாகிப்புகுந்தேயிருந்தனமே. (௯௪)

---

* தரிசனம் - என்றும் பாடம்.



தந்தையார்தாயார்தாரமார்புத்திரரார்
பந்தமாரெல்லாம்பரமாயிருந்ததே. (௯௫)

ஊரேதுலகேதுடலேதுண்பொருளேது
சார்பேதுளவெல்லாந்தானாயிருந்தனமே. (௯௬)

படித்தறிந்தபோதேபலகலையாகமங்களெல்லா
மெடுத்தெறிந்துவிட்டேனெனைவிடவேறில்லையென்றே. (௯௭)

தெருள்விழியோர்துணிவிதெனத்தேர்ந் தநுபூதியிற்கொள்வ [ர்
மருள்விழியோர்திரிவிலிதைமாயாவாதமதென்பர்.

ஓவதனின்மூவெழுத்துமோரெழுத்தேயானதுபோற்
சிவபரசிவமூன்றுஞ்சித்தொன்றேயல்லவோ. (௯௯)

புத்தியில்லாவென்றனக்கும்போதவிழிதான்திறந்து
முத்திபதங்காட்டுவித்தமுதுகிரிக்கென்கைம்மாறே. (௧00)

யானுணர்ந்தவிப்படியேயிப்பிரமவநுபூதி
தானுணர்ந்தேயெல்லோருஞ் சதிராய்வாழ்ந்திடவேண்டும்.

முமலவிருளினைநீக்கிமுத்திபதமெனக்களித்த
நிமலவிருத்தாம்பிகையேநீடூழிதான்வாழ்க. (௧0௨)

பிரமாநுபூதிவிளக்கம் - முற்றுப்பெற்றது.

சர்வஞ்சின்மயம்.

---

# விளம்பரம்.

---

அ. இராமசாமிச்சுவாமியவர்களால்

அச்சிற்பதிப்பிக்கப்பட்ட

கருமம், பக்தி, யோகம், ஞானம், இவைகளுக்குரிய:—

இப்புத்தகங்கள் சிதம்பரம் ஆயிகுளந் தென்கரையிலிருக்கும் - அ - இராமசாமிச்சுவாமிகள் புதுமடாலயத்திலும், சென்னபட்டணம் முத்தியாலுப்பேட்டை மண்ணடிக்கடுத்த முத்துமாரிசெட்டிதெருவு ௩௩ - வது நெம்பர் வீடு வே-ஆறுமுகம்பிள்ளை யவர்களிடத்திலும், ஷை சென்னபட்டணம் முத்தியாலுப்பேட்டை பவழக்காரத்[illegible] உஅ - வது நெம்பர் வீடு - மு - ரு - க - க[illegible], ௩௧ - வது நெம்பர் வீடு - கும - பெரி - கடை[illegible], க[illegible] - வது நெம்பர் வீடு- ராம - மு - கடையிலும், ஷை சிதம்பரம் தெற்கோடுங் கிழை வீதி ஸ்ரீமத். மு - சதா - சதாசிவ[illegible]தசுவாமியவாளிடத்திலும், மதுரை புது[illegible] பத்தில் புத்தகவியாபாரஞ்செய்யும் சண்முகம்பிள்ளையவர்களிடத்திலும், கிரயத்துக்குப் பெற்றுக்கொள்ளலாம்.



பலருடைய வேண்டுகோளின்படி இன்னஞ் சில அருமையான சாஸ்திரங்கள் அச்சிட்டு வெளிப்படுத்தப்படு.

ஷை புஸ்தகங்கள் வேண்டுமானால், வெளியூரார் புத்தகக்கிரயமும், ஷைபுஸ்தகங்களை வருவித்துக்கொள்ள ஸ்டாம்பு ஒட்டும் தபாற்செலவும், ஷைபுஸ்தகங்கள் தவறிப்போகாமல் போஸ்டாபிசார் ஒப்பித்தற் கேதுவான ரிசிஸ்தர் செலவும், ஷைக்காகத் தெரிவிக்குங் கடிதச்செலவுஞ் சேர்த்து ரூபாயை மணிஆர்டர்செய்து புத்தகங்களை பெற்றுக்கொள்ளலாம்.

---

